 உ

கடவுள் துணை.

# துர்முகி வருடத்தின் தொந்திரவு.

இஃது,

சிறுமணவூர்

## முனிசாமி முதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,

தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1905.



உ

தேவிசகாயம்.

# துர்முகிவருஷத்தின் தொந்திரவு.

தர்மதேவதை வணக்கம்.

கலி விருத்தம்.

தன்மமானெறி தாட்சண்யமின்றி
துன்பமேபுரி துன்முகித்தன்னுடை
கன்மனத்தின் கடுநடைபேசிட
தன்மதேவதை தாட்டுணையாகுமே.

என்சீர் விருத்தம்.

இந்தயுகம்நான்கிலுமே கலியொன்றேக
இருந்தயுகம்மூன்றிலுமே யிமையோர்யார்க்கும்
பந்தமுறத்தொடுவழக்குங் கலகமூட்டும்
படுபாவிநாரதன்றன் பாழ்தவத்தால்
வந்துதித்ததுன்முகியே கொடியபாவி
வாஞ்சையில்லாசண்டாளி முண்டைமோப்பி
நிந்தையிதென்றறியாத காளிநீலி
நீசெய்தவனியாயம் நிகழ்த்துவேனே. 1

கருணையில்லாதுன்முகிமா கொடியதுரோகி
காய்ந்துகாய்ந்தே கெடுத்தாய்துலாத்தின்மட்டும்
பெருமைவருமென்றேநீ விருச்சிகத்தில்
பேய்ந்துபேய்ந்தேகெடுத்தாய் பெட்டைநாரி
அறுவகைநால்தானியமும் விற்றுன்போனை
ஆய்ந்தோய்ந்துபாராம லலையச்செய்தாய்
தெருவிலினியுன்பேரைச் சொல்லிச்சொல்லி
சிரிக்கவைப்பேன் மூதேவிச்சீபோடி. 2

பல்லவி கண்ணிகள்.

துர்முகியின் தொந்தரைப்பாரீர்—ஐயா
துர்முகியின் தொந்தரைப்பாரீர்

தர்மநெறிசற்றுமில்லா
பர்வதக்குமரியருள்

துர்முகிதொந்தரைசொல்லா
பாலகனடிமுடிமேல் (துர்)

அநுபல்லவி.

சூரியன்முதலாயாறு நேரியில்வாரமிருக்க
கோரரூபதுன்முகியும் தாரதன்மியங்கற்றுச்

சனியுடன்கூடவே பிறந்தாள்—அன்றுமுதல்
பனிகளும்பெய்யாமலே செய்தாள் [ல்

கேட்டைமூட்டைசெவ்வாயென்றுநாட்டிலுளோர்சொல்வதுபோ
ஒட்டமாகதுன்முகியும் ஓடிவரும்பாச்சலிலே (துர்)

சரணங்கள்.

எதிரில்மாவாசை கொணர்ந்தாள்—அந்தப்படியே
முழுதிலுங்கெடுக்கத் துணிந்தாள்

காய்ந்துபோயுலகமெங்குந் தீய்ந்துபோய்க்கொடிசெடியும்
மேய்ந்துபிழையாடுமாடும் மாய்ந்துவிடும்படிதினம்

யெரிப்பாயெரித்துவிட்டதே—முப்புரத்துமீதுசிவன்
சிரிப்பாய்சிரித்துவிட்டதே

இத்தகையெரித்துவிட யெத்தனைநாளாகப்
பத்தமற்றதுன்முகியும் சித்தத்திலிருத்தினதோ

நல்லார்கள் பொல்லார்களில்லையா—இவ்வுலக
மெல்லாமிதற்கேக பகையா

ஆகிலுங்கடல்நெடுகே மேவிடுந்தீவுகள்தோறும்
தாவிடுங்குடிப்பயிரை சாவியாய்க்கரிந்திட

இப்படியெரிப்பதடமா—ஒருவிதத்தில்
செப்பவும்நாவுக்கடங்குமா ஒரு

கையினாலடிக்கினுமோர் கையினாலணைக்கவென்று
வையகமொழியைப்பொருள் செய்யாமலித்துன்முகிதான்

எட்டுதிக்குமொருதிட்டமாய்—கருப்புசத்தம்
அட்டகாசமாகக்கொட்டுமோ இந்த

வாதனையாலேயுலக மாதியந்தமுங்கருப்புச்
சேதியினால்மானிடர்கள் ஞாதியற்றலையும்போதே

வர்த்தகருக்குப்பெருங்கொள்ளையா—அவரவர்கள்
சொன்னதுசொன்னதே வில்லையா அவர்

மானியம்பாழாகிநவ தானியங்குறைந்திட்டாலும்
ஏனிந்தப்பலசரக்கும் ஜானுக்குமுழவிலைபோல்

ஒன்றிற்கிரண்டாகயேறுமா—எத்தனைநாள்மழையில்லை
யோசித்திட நேரமாகுமா

வாலியன்றன்னுரைபெருங் கோலியுங்கொள்ளாதெனவே
கானிலப்பழமொழியை மானிடரறியாமலே

எருமாருய்தானியங்கட்டி—கொஞ்சகொஞ்ச
கூறுகூருய்கடைகளிற் கொட்டி

இப்படியேமானமது யெப்பொழுதுங்காயுமினி
சொற்படிஜெனங்கள்வாயில் தப்படியடிப்போமென்று

யெண்ணமதுகொண்டிருக்கவே—கடவுளிதை
கண்திறந்து பார்த்துவிடவே

சாகரத்தையேகிளப்பி மேகக்குடத்தேநிறப்பி
ஏககாலத்தேகலைக்கப் போகவிட்டவாறதுபோல்

அடங்கொண்டிருபத்தெட்டுநாள்—இரவுபகல்
குடங்கொண்டுகொட்டுமதனுல்

மட்டமட்டக்கூரைவீட்டை தொட்டுதொட்டென்றேகிளப்பி
வட்டமானகட்டடத்தை கொட்டிதரைதிட்டமாக்கி

வீடுதோறும்நீர்நுழையுதே—குழந்தைகுட்டி
ஓடஓடப்பின்புரளுதே

இடிந்தவீடொருபுறம் சரிந்தவீடுங்கிளப்பி
பெரிந்தவீடுந்தரையில் படிந்தவீடுங்கூரையும்

எத்தனைகணக்கெடுக்கலாம் முன்சீபாலில்
அத்தனையும் வந்திருக்கலாம்



இ-ம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஆதி-பல்லவி.

தொந்தரைப்பாரீர் துன்முகிவருடத்தின்
தொந்தரைப்பாரீர்

அநுபல்லவி

சந்ததமுலகினேர் சாற்றுந்துன்முகிவருஷம்
சார்ந்தஅற்பிசிகடை நேர்ந்தகார்த்திகைமுதல் (தொந்)

சரணங்கள்

ஏறக்குறைசற்று யிருபத்திரண்டாண்டாய்
இந்தபரதகண்ட மெங்கினும்பலவாருய்
ஓரோரிடத்தில்மழை யுண்டில்லையென்பதாய்
உரக்கக்காய்ந்தும்பேய்ந்தும் திறக்கவெளிச்சமாகி

துன்முகிஷ்பூராய்
கன்மனம்நேராய்
ராளநுவரையிலும்

நெடியவுலகமெங்கும்
நின்றகொடிசெடிகள்
பொடிப்பயிர்நிலமெல்லாம்
போட்டவிரைகளெல்லாம்
நெருப்புக்குநிகராகி
அடுப்புக்குயிரையாகி
புழுதிக்களங்களாகி
பொரியுங்கரியுமாகி

பொசிந்திடக்காய்ந்து
யெரிந்திடத்தீய்ந்து
பெரியவிருட்சமெல்லாம்
உலகம்

எட்டுதிசையுமிந்த
இருப்புக்குடிகளெல்லாங்
கட்டுதானியமென்ற
பெட்டிபேழைகள்முதல்
திட்டமாய்காய்ந்திட
கருப்புக்கிடந்தானென்று
கையின்யிருப்பையெல்லாம்
கொட்டிநிரப்பிவைத்து

விழித்துக்கொண்டாரே
அழித்துக்கொண்டாரே
நாட்டுப்புரங்களெல்லாம்
ஐயா -

அங்கங்கேதானியம்
அடுத்தஅடுத்தவூர்கள்
எங்குங்கருப்புக்கூச்சல்
இதுவேசமயமென்று
அழுதிடப்பாதாளம்
தொடுத்துசென்னையின்மட்டும்
யெழுப்பிடவர்த்தகர்
யெழும்பிதுடையைத்தட்டி

எழுந்துக்கொண்டாரோ
தொழுதுக்கொண்டாரோ
பகலுக்குள்பிரபுவாக

ஊரெங்குமேமெழட்டு
ஒருமட்டிலொருவாரம்
பாரெங்குமொருகட்டாய்
பாபத்துக்கஞ்சாத
படிவிற்றதானியம்
யிருமூன்றுநாளைக்குள்
நாலைந்துபடியென்று
ஆபத்துதுரோகிகள்

படிகுறைத்தாரோ
சரிநிறைத்தாரே
ஆத்துமணலுங்கல்லும்
உண்ணும்

அன்னத்தில்மண்ணிட்டு
அடுத்தோர்மனதுநோகக்
கன்னியர்விதவையர்
காட்டிக்கொடுத்துபின்னே
பின்னஞ்செய்கொடியோரை
கெடுக்கமுயலும்பேரை
கற்புக்கெடுத்தபேரை
ஒட்டம்பிடித்தபேரை

குறையளப்போனை
புறையுரைப்போனை
கண்ணினுல்காணமல்

பஞ்சமாபாதக
படியைக்குறைத்தளக்க
இஞ்சொல்லாங் குருகூலி
ஈனத்தொழிலினோர்கள்
ராமைமந்நுபேருக்கும்
நெஞ்சுவலுத்தபேர்க்கும்
யீயாதபேருக்கும்
மானங்கெடுத்தபேர்க்கும்

எண்ணிடவாமோ
யெழுதிடப்போமோ
யேமன்செய்தண்டனே

ஆனைக்குமடிசற்று மளவுசாக்குமென்று
அவனியோர்சொல்படி மொழிபோலகிரகங்கள்
மோனைத்தவறிக்கொஞ்சம் முறைதப்பிநின்றதால்
முடிவினில்சிலதுநாள் மழைபெய்யாதிருந்ததென்
றெண்ணிக்கொள்ளாமல் வர்த்தகர்வெகுதுரோகம்
பண்ணிவிட்டார்கள் இந்த

துன்பத்தொழிலினாலே துகளுற்றவேழைகள்
தொழுதும்அழுதுமெத்த பழுதுற்றகோழைகள்
அன்பின்வழிநீரோடை அறிந்திட்டபரம்பொருள்
ஆண்டவன்கிருபைக்கண் ணீண்டிடப்புவிமீது
பெய்ந்ததைப்பாரீர் உலகமேநீருக்குள்
தோய்ந்ததைப்பாரீர் நேற்று

சித்திரைமுதலர்க மைத்தாறுமாதமாய்
ஜீவகோடிகளியாரும் சாகாக்கதியில்நேராய்
பத்தியெரியாக்குறை பண்ணிகார்த்திகைமுதல்
பகலுமிரவுந்தின மிருபத்துயெட்டுநாள்
படுமழைபிடித்து கதிர்மதியைக்கூட
பிடரியிலடித்து அவர்

செத்தார்பிழைத்தாரென்ற சேதிதெரியாவண்ணம்
சாயைகாலையென்ற பொழுதுமறியாதிண்ணம்
மொத்தமாயாகாயம் முழுதுங்கறுத்தவண்ணம்
மூடியிரவும்பகல் ஜாடிஜாடிவிட்ட
மோசத்தைப்பாரீர் பூமிமுழுதுங்கொண்ட
கிலேசத்தைப்பாரீர்

காலமழையிதாகில் காட்டுமேகதிரோணைக்
கங்குலிலென்றுனுந் திங்களுங்காயுமே
சாலவூழிக்காலம் சந்தித்ததோயென்ன
சங்கடமோபூமி யெங்கேமுழுகிப்போமோ
கலியுகம்போச்சோ பிரளயம்பெருகிடும்
காலமிதாச்சோ

இப்படிப்பெருமழை யெங்குமுழக்கமாக
யெட்டுத்திசைகள்தோறுங் கெட்டிவெள்ளம்போக
தப்படியாய்நவ தானியஞ்சரக்குகள்
தாறுமாறாய்வில்ல யேறுவதனியாயம்
தொந்தரைப்பாரீர் துர்முகிவருடத்தின்
தொந்தரைப்பாரீர்.

## கு ம் மி.

கார்த்திகைக்குமுன்னே பஞ்சமென்று ஜெனம்
காற்றிலடிபடும் பஞ்சதுபோல்
வேர்த்துக்கிடந்து விருக்கையிலேமழை
வெள்ளத்தைப்பாருங்கள் நேசர்களே. 1

கிருஷ்ணாநதிபெரும் பாளத்திலே யிந்த
துஷ்டமழையேக காலத்திலே
நஷ்டப்படுத்தியே போக்குவரத்தின்று
நாளைக்கும்வெள்ளம் பிரளுவதே. 2

விசாகப்பட்டண மாமந்தத்திக்கு
திசாதிசையெங்கும் பிசலடித்து
விசையதான ரெயிலுங்கிளம்பிட
முதரவடித்ததாம் நேசர்களே. 3

மதுரைஜில்லாவின் மேலூரைநோக்கியே
மாறிவருமுல்லை யாற்றினிலே
அதிரவேபெரும் வெள்ளமெடுத்து
அனேகவிடத்தைக் கிளப்பினதாம். 4

திருநெல்வேலியின் ஜில்லாபுரங்களைச்
சேர்ந்திடுந்தாம்பிர பரணியிலே
நிரம்பவெள்ளம் பெருகிவெகுமனை
நிலங்கள்கூடப் பிளந்ததுவே. 5

வைகையாற்றி லிருகரையுஞ் ஜலம்
வழியழகொண்டு நிலமுழுதும்
துய்யப்பயிர்களுந் தோட்டந்துரைகளுந்
தூக்கியெறிந்தது நேசர்களே. 6

சென்னையைச்சேர்ந்திடும் ராஜதானிமுதல்
ஜில்லாக்களெங்கு மழைபெருக்கம்
இன்னவிதமென்று சொல்லியெழுதவும்
யாரால்முடிந்தது நேசர்களே. 7

திண்டிக்கல்லில்பல பாகத்திலே மழை
தண்டுமிண்டாய்வெகு வேகத்திலே
அண்டையுள்ளசில யேரியுடையவே
கொண்டுபிரண்டுதாம் நேசர்களே. 8

இப்புவிநேரோ வடக்கதிலே மழை
கப்பியேமாருதங் காற்றதிலே
தப்பிவருகிற வேகத்திலேயிங்கு
கப்பலொதுங்கவும் பார்த்ததுவே. 9

காயும்போதெங்குங் கருப்புக்கூச்சலறு
கண்டாலுமொப்பு மொருவிதத்தில்
பேயுமிப்போதுங் கருப்புசத்தமானால்
பூமிபொருக்குமோ நேசர்களே. 10

முன்னாளரசர்கள் நாளையிலிவ்வாறு
முழுதுங்கருப்புக் கிடமானால்
அன்னிதமாக மடியத்தடையில்லை
ஆகாதவ்வாறிந்த நாளையிலே. 11

தாதுமுதல்மூன்று ஆண்டுமெட்டுமிந்த
தாரெங்குங்கொண்டப் பெருந்திகில்
மாதுவிக்டோரியுந் தீர்க்கலையா நம்ம
மனம்போல்சித்தமுங் கார்க்கிலையா. 12

தெய்வலோகம் கருப்புரினும் எந்த
தீவாந்திரத்தில் வருப்புகினும்
திவ்யவரசு செலுத்தும்விக்டோரியாள்
தேசத்திலென்றுங் குறைவில்லையே. 13

அன்னையைப்போலே தயவுடையாள் பெற்ற
அப்பனைப்போல குணமுடையாள்
பொன்னொளிபோல நிறமுடையாள் இந்த
பூலோகமெங்கும் புகழுடையாள். 14

முந்தநாள்வேந்தர்கள் தீங்கையும்பாங்கையும்
மூதாக்கள்சொல்லவுங் கேட்டிருப்போம்
அந்தநாள்போலக் குடிஜெனங்களிப்போ
யாரும்பயப்பட வேண்டுதில்லை. 15

எப்படிப்பட்டக் கருப்புரினும் புவி
யெங்குமழைக்கால் தங்கிடினும்
கப்பல்கப்பலாகத் தானியங்கொணர்ந்துக்
காப்பாள்விக்டோரி மகாராணி. 16

இராணியின்செங்கோ லிருக்களவுமிந்த
ராச்சியமெட்டுத் திசையளவும்
நாணிபயப்பட வேணதில்லை யெந்த
நாளுஞ்சௌக்கிய முண்டாமே. 17

அகவிலைச்சொல்பவ ரேதாழ புவி
யாளும்விக்டோரி சுகம்வாழ்க
ஜெகத்துச்சங்கதி சொல்லுமுனிசாமி
செந்தமிழ்நாளுந் தழைத்தோங்க. 18

துர்முகிவருஷத்தின் தொந்தரவு

முற்றிற்று.

